**முன்பக்கத்தொடர்:** மனிதர்களுக்கு எது அவசியமோ, எல்லா மனிதர்களும் அடைய வேண்டிய வஸ்து எதுவோ அதை அடைய வேண்டும் * இல்லாத ஒன்றிற்கு காதும் தோலும் ஒட்டவைத்து அபூர்வ ஜெந்துவாக செய்து விடமாட்டார்களா? * ஒன்றுமில்லாமலே கற்பனை திரிக்கக் கூடியவர்கள் கொஞ்சம் மண் கிடைத்து விட்டால் சும்மாவா இருப்பார்கள் * புலனடக்கத் திறனும், மன அமைதியும், நாவடக்கமே மேதை பயிற்சி * எதைச் செய்ய வேண்டுமோ, எது நமது கடமையோ அதை முழு மனதோடு செய்ய வேண்டும் * அகங்காரமில்லாதிருந்தால் தான் நல்ல காரியங்களைச் செய்ய முடியும். நானே செய்தேனென்று கர்வம் கொள்ளும் போது காரியம் கெட்டுப் போகிறது * நல்ல இசை, இனிய சுகந்தம், அற்புதமான சௌந்தர்யம், புலன்களை அடிமைப்படுத்தச் செய்யும் காரணம், இவைகள் ஒவ்வொன்றும் சேர்ந்து விட்டால் விஷயத்தில் எழும் இன்ப வெள்ளத்துக்கு அணைபோட முடியுமா? * அனித்தியமானது அழகு; அந்த அழகை உடையது எதுவோ அது சஞ்சலமின்றி இருந்தது * இஷ்ட தெய்வத்தின் சன்னதியில் நிற்கும் பரம பக்தன் போல் பேசாமல் நின்றிருந்தான் * எவன் தார்மீகனோ, எவன் ஆசார சீலனோ, எவன் நல்ல வழியில் செல்பவனோ அவனாக இருந்தான் ரவி * நிந்தைக்குப் பயந்து செய்வது என்றால், உன் சொந்த இச்சைதான் அங்கே இருக்கிறது. பிறரைப் பற்றிய எண்ணங்களுக்கு அங்கே இடமில்லை *

**தேச விருதங்களாக:**

சூரியன் ஒளி வீசும் வரையில், என் எலும்புகள் வலிக்காத வரையில், இந்த வேலையை நான் செய்வேன் * செருப்பு அணியாத அவன் பாதங்கள் சூரியன் ஒளியில் மின்னின. உல்லாசமான சிட்டுக்குருவியைப் போல் இருக்கிறாள் * இன்னும் சில நாட்களில், நீண்ட நாட்களாக அவனுடன் விளையாடும் மரணம், அவனைத் தழுவும் * சேறு நிறைந்த குட்டைகளிலிருந்து மோட்டார் சக்கரம் பட்டு நாற்புறமும் தெறித்த ஜலம் அசுத்த நீரை அடித்து விழுவதைப் போன்றிருந்தது * கோபத்தினால் நீரை அடிக்க ஆரம்பித்தால் அது நல்ல எண்ணமல்ல; அது வாளின் மருந்துக்கு நிகரானது என்பது நிஜம் பொருள் * இறகைக் கொண்டு பறவையைக் கண்டுபிடித்து விடலாம்; நாற்றத்தால் தாமரையைத் தெரிந்து கொள்ளலாம் * வானம் அவனை பூமியில் அழுத்துவதைப் போன்று அவன் குனிந்து நடக்கலானான் * அவனது வார்த்தைகள் கூழைப்போல் மெதுவாக வெளிவந்தன. நல்லெண்ணமோ, அனுதாபமோ அவன் பேச்சில் தொனிக்கவில்லை * நீ வேலையில் உட்கார வேண்டியிருக்கும். நல்ல பெயர் சேர சம்பத்தைவிடப் பெரிது என்பதை மறந்துவிடலாகாது * வாழ்க்கை நிகோணி அல்ல, அதைக் கழற்றி வீட்டு பையில் வைத்துக் கொள்ள * பழைய கழிகாரம் அளப்புடன் காலத்தைத் தொலைத்தது * காலத்தின் கோளாறு. இனிய வாழ்வுகள் கூட நம்மைத் தொந்தரவு செய்கின்றன * தன் செயல் நியாயப்படுத்த அவன் நீண்ட நேரம் யோசித்தான். குழம்பிய சிந்தனையிலிருந்து சிற்கு ஆதாரம் தேடவும் முயன்றான் * வாழ்க்கை விளையாட்டு பண்டமா? * பழைய ஞாபகங்களை உதறித்தள்ளி தன் செயலை அவன் மானசீகமாய் நியாயப்படுத்தினான் * குழந்தை போன்று நீயும் நெருப்புடன் விளையாடுகிறாய் * உன் சிந்தனை ஊர்க்குருவியைப் போன்று வேகமாக பாய்கிறது * அசையாத ஜலம் ஆழமாக இருக்கும் * கல்லறையில் வைத்துப் போற்றுவதைக் காணும் நாட்கள் அவர்கள் * காலம் கடந்து வருகிறவர்களுக்கு எலும்புதான் கிடைக்கும் என்பது பழமொழி * துப்பாக்கி பால் கொடுக்காது என்றாலும் அது மோசமானது என்று சொல்லமாட்டாய் * ஒருவன் வாழ்வில் காதலைவிடப் பெரிது வேறில்லை. மாதாவை மதிப்பது போன்று, தேசத்தை கௌரவிப்பது போன்று காதலையும் மதிக்க வேண்டும். என்னில்... காதல்... நாம் பெரிதாக மதிப்பவைகளில் — தேசம், வயல், வீடு, வாழ்வு, குழந்தைகள் — இவைகளின் பிரதிபிம்பம் — காதல் * காலம் காதலுக்கு எல்லைக்கோடு கிடையாது * அவன் தொண்டையில் ஏதோ சிக்கியதைப் போன்று எதையோ விழுங்கினான் * பட்டினியால் குழந்தைகள் நாணலைப்போல் மெலிந்திருந்தார்கள் * வாழ்வை இன்பம் நிறைந்ததாகச் செய்ய மனிதன் நன்மையை எதிர்பார்க்கிறான் * வற்றாத ஊற்றைப் போன்று நம்பிக்கை அவனுக்கு உயர்வழி தெரிந்தது * உடைந்த பதுமையைப் போன்று அவள் தோன்றினாள் * சத்தமில்லாமல் எண்ணங்களையும், செயல்களையும் உள்ளம் நிறை செய்து வைக்கிறது * அவள் நாக்கு அவர்களைப் போன்றது *

**நினைமணி வரட உதழ்:** சற்றும் பார்த்து இடைவிட வேண்டாம், சூழ்நிலையும், காணப்படும் வாழ்வுகளையும், எழுந்தவைகளையும் கண்டு "விநோதமாகவா" எனத் திகைக்கத் தோன்றும் * சந்தேகத்திற்கு அறியாமைதான் காரணம் * வரவெல்லாம் வாழ்க்கை ஆகும். ஒடுக்கம் எல்லாம் மரணம் ஆகும் * ஒத்துழைப்புதான் வாழ்க்கை; மனிதனின் பண்பு, கடமை * துன்பங்களை உண்டாக்குவது கண்ணீரை ஏற்படுத்துவதல்ல; எச்சரித்து ஞாபகப்படுத்தி நல்வழியில் திருப்பவே கையாளும் வழி * சூரியனின் உஷ்ணமும், வருணனின் மழையும் வேற்றுமை இருந்தாலும் செயலால் தொடர்ச்சியும் ஒத்துழைப்பும் இருக்கின்றன. இதனால் பருவங்கள் மலர்கின்றன. மனிதனைப் போல வெறுப்புகளை வெளியாமல் தங்கள் சக்தியை அளிக்கின்றன. பருவங்கள் தோன்றாவிட்டால் இயற்கை — மனிதனைப் போல் தன் கடமையை மறந்தால் * எங்கும் சீரழிவு பசுவறிவை காண்பிக்கின்றன, ஒன்று சுபலம்; மற்றொன்று பயம் * மனிதன் மனிதனே இல்லையா என்பது கஷ்டகாலத்தில்தான் தெரிந்துகொள்ள முடியும் * நீர் சுரக்கும் மேகங்கள் எங்கும் சேர * நாமும் வாழ பிறரும் வாழ இருப்பதை எல்லோரும் பகிர்ந்து கொள்வதே நன்று * உலகின் அறியாத வாழ்வும் தியாகமும், நிச்சயம் தான் * மனிதன் பரிதாபப்படுவதுடன், கண்ணீர் விட்டு வருவதுடன் தன் வாக்கின் மதிப்பை குறைத்துக் கொள்கிறான். செயலால் காட்டுவதே நன்று *